# கசடதபற

ஆசிரியர் : நா. கிருஷ்ணமூர்த்தி

34 மார்ச்—1975 50 காசு



# FORM IV

( SEE RULE 8 )

| | | |
|---|---|---|
| 1 | Place of Publication | I-20 Turnbull Road Madras 600 035 |
| 2 | Periodicity of its Publication | Monthly |
| 3 | Printer's Name<br>Whether citizen of India?<br>Address | M. K. Swamy<br>Yes<br>8 Mundakakanni Amman Koil Street Madras 600 004 |
| 4 | Publisher's Name<br>Whether citizen of India?<br>Address | N. Mahaaganapathy<br>Yes<br>I-20 Turnbull Road Madras 600 035 |
| 5 | Editor's Name<br>Whether citizen of India?<br>Address | N. Krishnamurthy<br>Yes<br>I-20 Turnbull Road Madras 600 035 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital | N. Mahaaganapathy<br>I-20 Turnbull Road<br>Madras 600 035 |

I, N. Mahaaganapathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated : 1-3-1975

(sd) N. MAHAAGANAPATHY
Publisher



ஒன்றரை வருட இடைவெளிக்குப் பிறகு கசடதபற வெளிவந்திருப்பதற்கு மகிழ்ச்சி தெரிவித்துப் பலர் எழுதியிருக்கிறார்கள். கசடதபற அதன் நோக்கங்களிலும் எதிர்பார்ப்புகளிலும் முன்போலவே இருப்பதைக் குறித்துப் பலர் எழுதியிருக்கிறார்கள். வாசகர்களின் நம்பிக்கையிலும், மகிழ்ச்சியிலும் கசடதபறவும் பங்கு கொள்கிறது.

# கண்ணாடித்துண்டு

இரவில் நினைவுகளைத் தழுவிக் கொண்டு
அழுதேன், நிரம்பவும் கண்ணீர் பெருக்கினேன்.
என்னை நெஞ்சோடு அணைத்தன
என் நினைவுகள்.
கலைந்திருந்த கேசத்தை மென்மையான விரல்கள்
முத்தமிட்டன.
என் வெளிரிய உதடுகளில்
மருத் தோன்றி பூசிய மென் விரல்கள்
ஆறுதல் அளித்தன.
இக் கனவுகள் கண்ணாடி போன்றவை
லேசான அதிர்விலும் இவை சிதறி விடுகின்றன.
காலையில் கண் விழித்ததும்
என் நெஞ்சின்மீது கவிழ்ந்து கிடந்தது
என் புகைப்படம்.
அதன் கண்ணாடிச் சிதறல்கள்
படுக்கையில் பரவிக் கிடந்தன.

பஞ்சாபி : சுவர்ண

தமிழ் : சரஸ்வதி ராம்நாத்

# சி. மணியின் எழுத்துக்கள்

## ஞானக்கூத்தன்

பதினைந்தாண்டுகளாக எழுதிவரும் சி. மணியின் கவிதைகளைப் படிக்கும் பொழுது மனதில் பல பிரச்னைகள் எழுகின்றன. இந்தப் பிரச்னைகள் அவருடைய கவிதைகளைப் படிக்கும் பொழுது மட்டும் தாம் எழுவதாகக் கருத முடியாது. ஆனால் அவர் நீண்ட காலமாக எழுதி வருவதாலும் தகுந்த மனிதர்களால் பிரச்சாரம் செய்யப்பட்டு வெளிக் கொணரப்பட்டதாலும் சி. மணியின் விஷயத்தில் இந்தப் பிரச்னைகள் தீவிரம் கொள்ளுகின்றன. 'வரும் போகும்' தொகுப்பில் கொடுக்கப்பட்டிருக்கும் கவிதைகளைப் படித்து முடித்ததும் கவிதைகள் தாமா இவை என்று கேட்பது தவிர்க்க முடியாததாயிற்று. இப்படிக் கேட்ட பிறகு, ஒன்றிரண்டு தலைப்பில் உள்ள எழுத்துகளும், ஒரு சில பகுதிகளும் கவிதைத் தன்மை உடையவை என்று நினைக்கத் தோன்றுகிறது.

எண்ணம்
வெளியீடு
கேட்டல்
இம்மூன்றும் எப்போதும்
ஒன்றல்ல ஒன்றென்றால்
மூன்றான காலம்போல் ஒன்று.

இந்த வரிகளைப் படிக்கும் போதும்—

மெய்ஞ்ஞான சித்தரின் காற்றுப்பைத் தத்துவம்
பொய்யாகும் என்பது வெற்றுசை.

என்ற வரிகளைப் படிக்கும் பொழுதும் நாம் படித்துக்கொண்டிருப்பது கவிதை என்று தோன்றுகிறது. 'முடியாதா சாவைச் சுடுகாட்டில் எரித்துவிட' என்ற வரியைப் படிக்கும் போதும் இப்படித் தோன்று கிறது. ஆனால்—

ஒருசெல் விலங்கும் செடியும் அழிவதில்லை;
அவற்றின் உடலுக்கு நிரந்தரம் உண்டு.
பலசெல் விலங்குக்கும் செடிக்கும் மனிதர்க்கும்
நிரந்தரம் வாய்க்காதா, முயன்றால் வாய்க்காதா?

என்ற வரிகளைப் படிக்கும் பொழுது இது கவிதையா அல்லது வேறு என்னவாவதா என்று சந்தேகம் தட்டுகிறது. இவ்வரியில் இரண்டு முறை வரும் வாய்க்காதா என்ற சொல் அபஸ்வரத்தைக் கொடுக்கிறது.

இலக்கிய வழியால் நிரந்தரம் கிடைக்கும்;
கலைகள் கொண்டு, அறிவினைக் கொண்டு,
அறமும் அன்பும் கொண்டு, மனிதன்
சாவைச் சுடுகாட்டில் எரித்துவிட முடியும்.

—இந்த வரிகளில் கூறப்பட்டிருக்கும் விஷயத்தில் நமக்குச் சம்மதம் ஏற்படுவது முன்பின் இருக்க, இந்த விஷயத்தின் கனத்தை இவ்வரிகளில் எதிரொலிக்கக் கேட்பதாகக் கூற முடியாது. முதல் வரியின் சொற்கள் பல கைகள் மாறி சொல்பவனுக்குச் சிரமம் இல்லாமல் உதிர்கிற தகவலைப் போல விழுகின்றன. ஒரு விஷயத்தைக் கூறுகையில், அந்த விஷயம் கவிஞனுக்கு அனுபவபூர்வமாகக் கிடைத்திருக்குமானால், சொல்லுவதில் வெளிப்படுகிற ஸ்வயப் பற்றையும் சேர்த்துப் பார்க்க முடியும். மூன்றான காலம்போல் ஒன்று என்று முடிகிற வரிகளில் தெரிய வருகிற அந்தப் பற்று இந்த வரிகளில் இல்லை.

புதுக் கவிஞர்களுக்கு யாப்புத் தெரியாது என்று பரிகசிக்கப்பட்ட நாட்களில், சி. மணியின் யாப்பறிவு புதுக் கவிதையின் பிரச்சாரகர்களுக்குப் பெரிதும் பயன்பட்டதுண்டு. பார்க்கப்போனால் ந. பிச்சமூர்த்தியைக் காட்டிலும் சி. மணியின் யாப்பு திறமை மிகுந்தது. இந்தத் தொகுப்பில் யாப்பு சுத்தமான கவிதைகளும் உள்ளது தற்செயல் அல்ல என்பது தொகுப்பின் கடைசியில் 'கவியரங்கம்' என்ற தலைப்பில் காணப்படும் எழுத்துக்கள் சான்று சொல்லும். இந்தக் கவியரங்கம் என்ற பகுதியில் யாப்பு யாப்பின்மை பற்றிய சர்ச்சையைக் கேலி செய்திருக்கிறார் சி. மணி. கைத்தறி ஆடைகள் சம்பந்தமாகவும், மகளிர் உட்கச்சு சம்பந்தமாகவும் முன்பே எழுதியிருக்கும் சி. மணி இந்தக் கவிதையில் துணிமணிகளின் குறிப்புக்களில் இந்த சர்ச்சையைப் பற்றி ஒரு விளம்பரத்தைக் கொடுத்திருக்கிறார். அதில் ஒரு பகுதி:

இவருக்குக் கவலை இல்லை
இவருக்குக் கிடைத்துவிட்டன
புதுமை
தரும் பர்ஷன்
உலகின் பிரபலமான துணிகள்
அற்புதமானவை. எடுப்பான தனித் தன்மைக்கு அழகு
ஊட்டுபவை, ஜக்கார்டு மற்றும்
ப்ளெய்ன். ஹுவன்
& நிட்டெட். டெக்ஸரைஸ்டு
பாலியெஸ்டர் மற்றும் ஸ்ட்ரெச்.

இந்தப் பகுதியைப் படிக்கும் ஒருவர் கவிதையின் உருவத்தை விபரீத எல்லைக்குக் கொண்டுபோய் சி. மணி குழப்புகிறுர் என்று கருதிவிடக்கூடும். இதில் உள்ள விஷயம் கவிதை பற்றிய சர்ச்சை யைப் பற்றிய சி. மணியின் கருத்தாகும். இதில் யாப்பு, யாப்பின்மை என்ற சர்ச்சையில் சி. மணி மகிழ்ச்சிகரமான நடு வழியைப் பின்பற்று கிறவராகத் தெரிகிறுர். உருவத்தில் நடையில் இதே நிலைமைதான் அவரது எழுத்துகளில் ஒருவர்க்குப் பார்க்கக் கிடைக்கிறது. பல்கலைக் கழக மாணவர்களுக்கென்று சுத்தப்படுத்தப்பட்ட 'புதுக் குரல்கள்' என்ற தொகுப்பின் முன்னுரையில், சி. மணியின் எழுத்துக்களில் பிரிட்டிஷ் கவி டி. எஸ். இலியட்டின் பாணி இருப்பதாக சி. சு. செல் லப்பா தெரிவித்திருக்கிறுர். ஆனல் சி. மணியின் மொழி நடை பழங் கவிதை வரிகளைப் பயன்கொள்ளப் போய் பற்றைப் பற்றையாகத் தனித்துவிடுகிறது. டி.எஸ். இலியட்டின் நிர்ப்பந்தத்துக்கும் சி. மணிக் கும் சம்பந்தம் ஒன்றும் கிடையாது என்றோ மேலும் சி. மணி இலியட் அல்ல என்றோ இங்கு வற்புறுத்தத் தேவையில்லை. இலியட்டின் பரிச் சயப் பெருமைக்குப் பங்கு கேட்காத ஷண்முக சுப்பையாவின் சிறிய கவிதை ஒன்றில் இலியட் கருதிய பாங்கு பிரதிபலிப்பதைப் பார்க்கும் பொழுது, சி. மணியின் இந்த முயற்சிகளின் வியர்த்தம் வெளிப்படு கிறது. இதைத் தவிரவும், சில பக்கங்களில் இப்படிக் கவிதை கேட் கப்படுவதும் உண்டு.

—ஏய்
ஏய் டிரைவர்—நடுக்கம்.
என்ன தூக்கமா—குளிர் காய்ச்சல்.

நைட் ஷோவா, ஐயாவுக்கு
நைட் ஷோ் இல்லாமல் முடியாதா—வலிப்பு.
ஓகே ஓகே காரை எடு.
பை மினிட்ஸ்லே பீச்
தந்தத்தில் செதுக்கி
கண்ணுடிச் சேலையெர்ட்டி
—ஷீலா ரெடியா?

இதைப் படிக்கும்பொழுது நாம் கவிதையைப் படிக்கிறோம் என்று சொல்ல முடியுமா? கவிதை பேச்சைப் போல இருக்க வேண் டும் என்ற கோட்பாட்டுக்கும், பேச்சு வெறும் பேச்சாகத் தங்கிவிடுவ தற்கும் எவ்வளவு வித்தியாசம் உண்டு! ஆதிநாதனின் கவிதை பேச்சாக அமைந்திருப்பதற்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்!

இலக்கியம் படைக்கிருயா?

இல்லை.

தெரியாதா உங்களுக்கு

வாத்துக்கள் ஒருபோதும் குளிப்பதில்லை.

(நீர் வாத்துக்கள்—ஆதிநாதன்)

சி. மணி எழுதுவதற்குத் தூண்டுகோலாக இருந்துவரும் சி.சு. செல்லப்பாவின் 'மெரினு'விலிருந்து ஒரு பகுதியை இங்குக் குறிப்பிடுவது இடம்தவறுவதாகாது.

ஒரு பக்கம் பால் ஐஸ் ஐஸ்புரூட் ஐஸ்க்ரீம்
ஒரு பக்கம் மாங்கா தேங்கா பட்டாணி சுண்டல்
ஒரு பக்கம் சிப்ஸ் காஷ்யூ நட் பாப்கார்ண்
ஒருபக்கம் முறுக்கு வடை தட்டை மிக்சர்
ஒருபக்கம் கலர் சோடா டீ காபி கரும்புச்சார்
ஒரு பக்கம் பீடா புகையிலை சிகரெட்டு பீடி
கூவும் குரல்கள் வாங்குவோரைத் தேடும்.

(மெரீனு—சி. சு. செல்லப்பா)

இந்த மூன்று பகுதிகளுக்கும் இடையிலான வேற்றுமை பாத்திர சம்பந்தப்பட்டது என்று கருதுவதற்கில்லை.

இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கும் 'நரகம்' என்ற நீண்ட கவிதையைப் பற்றி எழுதத் தனக்கு ஒரு கட்டுரையே தேவைப்படும் என்று 'புதுக்குரல்கள்'முன்னுரையில் சி.சு. செல்லப்பா எழுதியிருக்கிறார். இதுவரை சொல்லிவந்த பிரச்னைகள் இந்தக் கவிதையிலும் உண்டு என்பதோடல்லாமல், இந்தக் கவிதையில் சி. மணி தான் தெரிவிக்கிற உலகத்திலிருந்து கலைக்குரிய சேய்மையைப் பெறத் தவறியும் இருக்கிறார். இதன் விளைவாக—

நாடகத்தில் பாத்திரங்கள் பேச்செல்லாம்
ஆசிரியர் பேச்சா? குறுந்தொகைக்
கவிதை கவிஞரின் பேச்சா?
'நரகம்' எனது நரகமா,
நரகத் தலைவன் நரகமா?

என்று ஆசிரியனே முன்வந்து கேட்கிற பரிதாபம் ஏற்பட்டுவிடுகிறது. இதன் மற்றொரு எல்லைக் கோட்டுக்குப் போனதில்தான் 'நானொரு மினி மேதை' என்ற கூற்று பிறப்புக் கொள்கிறது என்றும் கருதலாம்.

'இந்த இருபதாம் நூற்றாண்டு மனிதனுக்குத் தான் வாழும் உலகம் ஒரு விசித்திரப் போர்க்களம். அவனுக்கு ஏற்படும் மோதல்கள் சிக்கலானது. எது உண்மை, எது போலி, அடிப்படை எது, மேல் மட்டம் எது என்று முடிவு கட்டுவது சிரமமானதாக இருக்கிறது' என்று சி. சு. செல்லப்பா மேலே பிரஸ்தாபிக்கப்பட்ட முன்னுரையில் சொல்லி இருக்கிறார். எது உண்மை எது போலி என்கிற பிரச்னை கவிதைக்கும் பரவியிருக்கிறது. சி. மணியின் கவிதைகளைப் படித்ததும் இரண்டாவதன் அம்சமே அதிகமென்று கருதிவிட நிறைய இடம் இருக்கிறது.

---

வரும் போகும் - கவிதைத் தொகுப்பு - சி, மணி - க்ரியா வெளியீடு

23 பி. எஸ்ப். குவாட்டர்ஸ் சென்னை 600 034 - விலை : ரூ. 10_0

# நிழல் மரம்

## நா. கிருஷ்ணமூர்த்தி

தலை குனிந்து எழுதிக் கொண்டிருந்த ராமதுரை முதுகில் கையழுந்துவதை உணர்ந்தவனாகத் திரும்பினான். மேஜை விளிம்பில் ஒரு கையும், இவன் முதுகில் ஒரு கையுமாக சிரித்தபடி காமேஸ்வரன் நின்று கொண்டிருந்தான். அவனை எதிர்பாராததால் ராமதுரை ஆச்சரியமுற்று பரபரக்க நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளி, ''உட்கார்'' என்று எதிர் நாற்காலியைக் காட்டினான்.

''டஸ்டர் கிளாத் இருக்கா''

ராமதுரை கொடுத்த துணியால் நாற்காலியைத் துடைத்து விட்டு, ''ரொம்ப வேலையோ?'' என்று கேட்டவாறு அமர்ந்தான் காமேஸ்வரன்.

''வேலைக்கு ஓய்ச்சலேது. ஒழிவேது''

பிறகு மூக்குக் கண்ணாடியைக் கழட்டிக் கீழே வைத்து விட்டு இவனைப் பார்த்தபடியே சொன்னான்: ''ரெண்டு தடவை ஃபோன் பண்ணினேன் நீ கிடைக்கலே''

''கொஞ்சம் வெளியே போயிருந்தேன்''

காமேஸ்வரன் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து கொண்டு, ''வெளியே போகலாமா? வெய்யில்ல வந்தது, தலையை வலிக்கிறது'' என்றான். ராமதுரை பெரிய அட்டையால் ஃபைல் கட்டுக்களை மூடி எழுந்தான்.

காமேஸ்வரன் இவனுக்கு முன்னால் நடந்தான்.

மாறி மாறி வரும் தனது கால்களைப் பார்த்தபடியே ராமதுரை சென்றான்.

சாலையைக் கடந்து ஹோட்டலுக்குள் சென்றார்கள். மங்கிய ஒளியும்—ஏ.சி.யின் குளுமையும் திடீரென்று காலத்தைப் பின்னுக்குத் தள்ளியது. சற்று முன்வரை அனுபவித்த புழுக்கம், வெய்யில் எல்லாம் கனவுபோலத் தோன்றியது.

காமேஸ்வரன் கைகளை மேசையின்மீது நன்றாக அழுத்திக் கொண்டு இருளின் சாயல் பெற்ற நீலவொளியிலும், வெகு சன்ன

மாகக் கேட்கும் சிதார் இசையிலும் லயித்திருந்தான். சிதார் வேக மாகக் கீழ் இறங்குகையில் மிகுந்த உணர்ச்சி வசப்பட்டு, தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாதவனுக இவன் பக்கம் திரும்பி, ''How wonderful'' என்று வியந்துரைத்தான். கலையில் அவனின் ஈடுபாடு தனக்கு இல்லை என்று ராமதுரைக்குத் தோன்றியது. கலையில் மட்டுந்தானு? கொஞ்சம் நன்ருக—லட்சணமாக—பேசத் தெரிந்தவ ளாகப் பெண் கிடைத்தாலும் தன்னை இழந்து அவளை அடையும் வேகம் அவனுக்கு இருக்கிறது என்று ராமதுரைக்குத் தோன்றியது.

மகிழ்ச்சியில் கரையும் அவன் முகத்தைப் பார்த்தபடியே அவையெல்லாம் தனக்கு ஏன் சாத்தியமில்லாமல் போகிறது என்று கேட்டுக் கொண்டான்.

காமேஸ்வரனை முதலில் பார்த்தது நினைவுக்கு வந்தது. ஒரு நண்பனின் வீட்டில் எட்டு பேருக்கிடையில் அவனைச் சந்தித்தான். யாரோ ஒருவன் அறிமுகப்படுத்தி வைத்தான். சம்பிரதாயத்திற்காக அவன் புன்முறுவல் பூத்து ஒதுங்கினுன். இவன் அக்கறை ஏதுமில் லாது—ஒரு புத்தகத்தைப் புரட்டி புரட்டி மூடிக் கொண்டிருந்தான். அவன் பேச்சே இவனுக்கு எரிச்சலூட்டியது. சலசலவென்று நிறுத் தாத பேச்சு. இவனுல் இருக்கமுடியவில்லை. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் நழுவி வெளியே வந்தான். வந்ததும்தான் புதிய காற்றை சுவாசிப்பது போல இருந்தது. பஸ் ஸ்டாண்டிற்கு சென்ருன். பஸ் ஸ்டாண்டு வெறுமையாக இருந்தது. இப்போது தான் பஸ் போயிருக்க வேண்டுமென்று நினைத்தான். கை புத்த கத்தை விரிக்கக் கண்கள் அதில் அமிழ்ந்தன.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு கை தொடுவதை உணர்ந்தான். காமேஸ்வரனைக் கண்டதும்' புத்தகத்தை மூடி, ''என்ன அதுக் குள்ளே—'' என்ருன்.

''கொஞ்சம் வேலை இருக்கு போகணும்''

ராமதுரை சிரித்துக் கொண்டான்,

''உன்னைத் தேடித் தேடிப் பார்த்தேன். எப்படி வந்தே யாருக்கும் தெரியாம?''

''பேச்சில் நீ யாரையும் கவனிக்கலே''

காமேஸ்வரன் பெரிதாகச் சிரித்தான். பஸ் வந்தது. இரண்டு பேரும் ஒன்ருக ஏறி உட்கார்ந்தார்கள். அவன் இவன் கதைகளைப் படித்திருப்பது பற்றி—அதில் விசேஷமாக மனித உறவுகளில் ஏற்படும் ஒரு கசப்பை, ஒருவிதச் சார்பும் இன்றி அழுத்தமாக எழுதியிருப்பது தன்னை வெகுவாகக் கவர்ந்துள்ளதாகவும், 'நிழல் மரம்' என்ற கதையை ஆங்கிலத்தில் மூன்று பக்கங்களுக்கு மேல் மொழி பெயர்த்து வைத்திருப்பதாகவும் கூறினுன். அவனுக்கு என்ன பதில் சொல்வது என்று ராமதுரைக்குத் தெரியவில்லை. பார்வை சாலையின் ஓரத்திற்குத் திரும்பியது. இறங்க வேண்டிய இடத்தை பஸ் நெருங்குவது தெரிந்தது. இவன் எழுந்து நின்று, ''வீடு வந்தாச்சு'' என்ருன். அவனும் இவன் கூடவே இறங்கினுன்.

காமேஸ்வரனின் நடத்தை தன்னை ஆட்கொள்வது போல ராமதுரை உணர்ந்தான். வெட்கமாகவும் இருந்தது. தன்னை விரும்பும் நண்பனின் நட்பு இவனைக் களிப்புற வைத்தது. பின்னால் இவனைக் காண அவன் வருவதோ—அவனைக் காண இவன் போவதோ தவிர்க்க முடியாத ஒரு செயலாகிவிட்டது. சில நாட்களிலேயே காமேஸ்வரனின் நண்பர்கள் பலரையும்—பல மட்டங்களில் ராமதுரை கண்டான். எந்த மட்டத்திலும் சரி—பேசும் ஒவ்வொருவரிடத்திலும் நான் உனக்கு மட்டும் உரியவன் என்பதை காமேஸ்வரன் பிரயாசை ஏதுமின்றி நிரூபிப்பது ராமதுரைக்கு ஆச்சரியமாக இருந்தது. அவனிடமிருந்து தான் கற்றுக்கொள்ள வேண்டியவை நிறைய இருப்பதாக உணர்ந்தான்.

''இந்த மாதிரியான மியூசிக்கை—இந்த மாதிரியான இடத்திலே கேட்டுக் கொண்டே காலம் முழுவதும் இருந்துடலாமென்று தோன்றுகிறது'' என்று சொல்லியபடி காமேஸ்வரன் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான்.

ராமதுரை பதிலொன்றும் சொல்லாமல் தொங்கும் திரைச் சீலைகளையே பார்த்தபடி இருந்தான். இருவருக்கும் காலம் ஸ்தம்பித்து விட்டதுபோல இருந்தது.

சற்று நேரத்திற்கெல்லாம் சிதார் ஒலி அடங்கி—சப்தமாக பல டிரம்கள் முழங்கின. காமேஸ்வரன் முகத்தைச் சுளித்து நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளினான். ராமதுரையின் பார்வை அவன் பக்கம் திரும்பியது. அவன் சிகரெட்டை எடுத்து நீட்டினான். இவன் சிகரெட்டை வாயில் வைத்துக் கொண்டதும் அவனே பற்ற வைத்தான். ராமதுரை முதன் முதலாகத் தன்னோடு சேர்ந்து சிகரெட் குடிக்கத் தொடங்கியது காமேஸ்வரனுக்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தது. இவன் புகையை இழுத்து ஊதுவதைப் பார்த்துக் களிப்புற்று முதுகில் பெரிதாகத் தட்டி, ''நன்றாகத்தான் சிகரெட் பிடிக்கறே'' என்றான்.

ராமதுரை சிகரெட்டை கையில் எடுத்துக் கொண்டு புகையை அவன் முகத்துக்கு நேராக ஊதினான். அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஆனால் சற்றைக்கெல்லாம் புகை மூக்கில் ஏற ராமதுரை பெரிதாகத் தும்மினான். வாயைத் திறந்து கொண்டு தும்மியதால் எச்சில் நாலாப் பக்கமும் தெரிந்தது. காமேஸ்வரன் வாசனை வீசும்—சலவை செய்த தன் கைக்குட்டையை எடுத்து நீட்டி, ''நான் சொன்னதை இல்லேன்னு நிரூபிக்கத் தோணித்தா?'' என்று கேட்டான்.

இவன் பதில் எதுவும் சொல்லாது சிகரெட்டை ட்ரேயில் அணைத்துப் போடப் போனான்.

''வேஸ்ட் பண்ணாதே. பிடி''

''இல்ல -'' ராமதுரை சிகரெட்டை அணைத்தான்.

வெயிட்டர் இவர்கள் பக்கமாக வந்தான். காமேஸ்வரன், ''டிபன்'' என்றதும் இவன் மறுத்தான். தான் வீட்டிலிருந்து தயிர்

சாதம் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். அவன் சிரித்து, ''பரவாயில்லை'' என்றான். இவனால் அதற்கு மேல் பேச முடியவில்லை. அவன் கூடவே சாப்பிட்டான். பில் வந்ததும் இவனே பணத்தை எடுத்து வைத்தான்.

காமேஸ்வரன், ''ஒண்ணும் அவசரமில்லையே?'' என்று நாற்காலியில் சாய்ந்து சிகரெட்டைக் கொளுத்தினான்.

''இங்க சிகரெட் பெட்டியைத் தள்ளு''

''எதுக்கு?''

''சும்மாதான்''

ராமதுரை சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான்.

''நாலு மணிக்கு நீ ஃப்ரீதானே?''

''அஞ்சு வரைக்கும் ஆபீஸ்''

''அது கெடக்கட்டும்''

''என்ன விஷயம்?''

''நாலு மணிக்கு ஜெர்மனியிலிருந்து மூணு பேர் நாராயணன் ரூமுக்கு வராங்க. ஆஞ்சநேயலு அழைத்துக்கொண்டு வரான். அவுங்க முக்கியமா இளைய தலைமுறை எழுத்தாளர்கள்—ஓவியர்களைப் பார்க்க ஆசைப் படறாங்களாம்—''

''நீ பார்த்தா எல்லோரும் பார்த்ததுபோலதான்''

காமேஸ்வரன் சட்டென்று ராமதுரையைக் குத்திட்டுப் பார்த்தான்.

''நீ அவசியமா வரணும்''

''எனக்கு ஆபீஸ் இருக்கே. நம்ப வேணு வீட்டிலேதான் இருப்பான். வேணும்னா அவனை அழைத்துக் கொண்டு போ''

''இதோ பார் ராமு, அவர்கள் நிஜமான எழுத்தாளர்களை—ஓவியர்களைப் பார்க்க ஆசைப்படுகிறார்கள். நீ வராட்டா சரியாக இருக்காது. உனக்கு ஆஞ்சநேயலுவைப் பத்தி சொல்லியிருக்கிறேன் இல்லையா—அவனும் வரான். அவனுக்கும் உன்னைப் பார்க்கணும்னு ரொம்ப ஆசை''

''வர்றதப் பத்தி ஒண்ணுமில்லே. ஆனா வந்து நான் என்ன பண்ணப் போறேன்னுதான்—''

''அது கிடக்கட்டும். இப்ப மணி ஒண்ணாகப் போறது. அரை நாள் லீவு போட்டுடு. சேர்ந்தே போயிடலாம்''

''இல்லே, ஃபைல் இருக்கு. அதெ முடிக்காம கிளம்ப முடியாது''

''எப்ப முடியும்?''

''நாலு—நாலரைக்கு''

''அவ்வளவு நேரமா ஆகும்?''

''சீக்கிரமா முடிக்கப் பார்க்கிறேன்''

''எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமா நாராயணன் ரூமுக்கு வந்துடு''—சிகரெட்டைக் கடைசி முறையாக உறிஞ்சி விட்டு எழுந்தான் காமேஸ்வரன்.

ராமதுரை அவனை பஸ் ஏற்றிவிட்டுவிட்டு ஆபீஸுக்குச் சென்ற போது ஆபீஸ் லஞ்சுக்காகக் கலைந்திருந்தது. தன் இடத்தில் அமர்ந்து வேலை செய்ய ஆரம்பித்தான். எழுத எழுத ஃபைல் முடிவு இல்லாதது போலவே தோன்றியது. உடலும், மனமும் சோர்வது போல இருந்தது. பேனாவைத் திறந்தபடியே போட்டு விட்டு, கால்களை மேஜைக்கு அடியில் நீட்டி சாய்ந்து கொண்டான். எதிர் நாற்காலிக் கார வசந்தா இவனைப் பார்த்து புன்னகை பூத்தாள். இவனுக்குத் திடீரென்று வெட்கம் வந்தது. பேனாவை எடுத்து மறுபடியும் எழுத ஆரம்பித்தான். பேனா பேப்பரில் சரசரவென்று எழுதியது. ஓட்டம் இவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. எழுதி முடித்து, எரிச்சலுடன் கட்டி ட்ரேயில் போடும்போது மணி மூன்றரை அடித்தது. சோம்பல் முறித்துக்கொண்டே போய் காண்டீனில் காபி சாப்பிட்டுவிட்டு வந்து பர்மிஷனுக்கு எழுதினான்.

காபிக்குப் போன ஹெட் கிளார்க் நாலேகாலுக்கு மேல்தான் வந்தாள். இவன் பர்மிஷன் கடிதத்தைப் பார்த்ததும், ''மூணாவது பர்மிஷன்'' என்று சொன்னாள். அதை ராமதுரை காதில் வாங்கிக் கொள்ளாமல் வேகமாகப் படி இறங்கிக் கீழே சென்றான்.

பஸ் ஸ்டாண்டிற்குப் போனதும் நாராயணன் ரூமுக்கு நேராக பஸ் இல்லை என்பது இவனுக்கு நினைவு வந்தது. இரண்டு தெரு நடந்து சென்றால் நேர் பஸ்ஸைப் பிடிக்கலாம். இவனுக்கு நடக்க லாம் என்று தோன்றியது. வேகமாக நடந்து சென்றான். நடக்கும் போதே கடிகாரத்தைப் பார்த்தான். மணி நாலரை ஆகிவிட்டது. நேரத்திற்குப் போக வேண்டுமென்ற நினைப்பு திடீரென்று வந்தது. கண்ணில் பட்ட டாக்ஸியை நிறுத்தி ஏறிக் கொண்டான்.

நான்கு மாடிகள் ஏறி அறைக்குச் சென்றபோது ஐந்து பத்து. ரொம்ப நேரமாகவில்லை என்பது திருப்தியளித்தது. பாதி ஒருக்களித் திருந்த கதவைப் படாரென்று திறந்துகொண்டு உள்ளே நுழைந் தான். பார்வை நாலாப் பக்கமும் சென்றது. சுவரை ஒட்டி தாடியோடு ஒரு ஜெர்மானியன். அவனது இடது பக்கத்தில் ஒரு பெண்—ஜெர்மன் காரி—கால்களை மடக்கி உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் ஹேமா—அப்புறம் இன்னொரு ஜெர்மன்காரன். அவன் பக்கத்தில் காமேஸ்வரன். எதிர்ப் பக்கத்தில் ஆஞ்சநேயலு, நாராயணன், மாதவன்.

''குட் ஈவினிங், சாரி கொஞ்சம் நேரமாகிவிட்டது'' கையி லிருந்த புத்தகத்தைப் படீரென்று கீழே போட்டுவிட்டு நாராயணன்

பக்கத்தில் அமர்ந்தான் ராமதுரை. அவர்கள் பேச்சு இவன் திடீர் நுழைவால் சிதைந்து போயிற்று.

''சாரி. நீங்கள் தொடருங்கள்—''

காமேஸ்வரன், ''—எங்கள் பாரம்பரியம்—'' என்று ஆரம் பித்தான்.

''இவனெ அறிமுகப்படுத்துப்பா'' என்ருன் நாராயணன்.

''பேச்சிலே மறந்து போச்சு'' என்ற காமேஸ்வரன் ஜெர்மன் பெண் பக்கம் திரும்பி, ''சிறுகதை எழுத்தாளர். இரண்டு சிறுகதைத் தொகுதிகள் வெளியாகியிருக்கின்றன. பெயர் ராமதுரை'' என்ருன். ஜெர்மானியப் பெண் தலையை அசைத்து பல்லெல்லாம் தெரியச் சிரித்தாள். காமேஸ்வரன் அவர்களைப்பற்றி இவனுக்கு விஸ்தாரமாகச் சொன்ஞன். ஆனல் ராமதுரையோ அதைக் கவனிக்காமல், கால்களை நீட்டி, கைக்குட்டையை பாண்ட் பாக்கெட்டிலிருந்து எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான். தாகமாக இருப்பதுபோல இருந்தது. தண்ணீர் கிடைக்குமா என்று சுற்று முற்றும் பார்த்தான். எல்லோர் எதிரிலும் ஃபாண்டா—குடித்தும், குடிக்காமலும் இருந்தது. ஹேமா பக்கத்தில் ஐந்தாறு ஃபாண்டா திறக்காமல்.

''ஹேமா ஒரு ஃபாண்டா எடு'' ராமதுரை கையை நீட்டிஞன். அவள் சாவியையும், ஃபாண்டாவையும் எடுத்துக் கொடுத்தாள் இவன் திறந்து இரண்டேமூச்சில் குடித்து, பெரிதாக ஏப்பம்விட்டான்

''ஒன் மோர்''—ஹேமா கேட்டாள்.

''எடு, ரொம்ப தர்கமா இருக்கு''

காமேஸ்வரன் பார்வை இவன் பக்கம் திரும்பியது.

''ரொம்பப் பசிப்பா''—சுவரில் சாய்ந்தபடியே ஃபாண்டாவைக் குடிக்க ஆரம்பித்தான்.

ஹேமா தவழ்ந்து இவன் பக்கமாக வந்தாள்.

''அவன் பேச்சு எப்படி இருக்கு?''—மெதுவாகக் கேட்டாள்.

''நன்ருகத் தான் இருக்கு''

''வந்ததிலே இருந்து அவன்தான் பேசருன். யாரையும் வாயைத் திறக்க விடலே''

இவன் ஏப்பம் விட்டான்.

ஹேமா முகத்தைச் சுளித்து மாதவன் பக்கம் சென்ருள்.

எட்டு மணிக்கு வந்திருந்தவர்கள் செல்லவேண்டும் என்றதால் கூட்டம் கலைந்தது. ராமதுரை அவசரம் அவசரமாகக் கீழே இறங்கிஞன். ஹேமா இவனை நிறுத்தி காமேஸ்வரன் கூப்பிடுவதாகச் சொன்ஞள். இவன் மேலே ஏறி அவன் பக்கமாகச் சென்ருன்.

ஆஞ்சநேயலுக்கு 'பைப்' பற்றவைக்க காமேஸ்வரன் உதவி செய்து கொண்டிருந்தான். இவன் அருகில் சென்றதும் தீக்குச்சியைக் கீழே போட்டுவிட்டு, ''ராம், மீட் மிஸ்டர் ஆஞ்சநேயலு. ஆர்ட் கிரிடிக், அமெரிக்காவில் இந்தியக்கலை பற்றிப் போதிக்கிருர்'' என்ருன்.

ஆஞ்சநேயலு பைப்பை ஊதிக் கொண்டே நுனிநாக்கால் ஆங்கிலத்தில், ''உங்க கதைபற்றி நிறையக் கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்ருன்.

ராமதுரை பதிலொன்றும் சொல்லவில்லை.

காமேஸ்வரன் இவன் தோளில் கையைப் போட்டு, ''போயிடாதே. ஒரு சின்ன பார்ட்டி இருக்கு'' என்ருன்.

''நான் வீட்டிற்குப் போகணும்,' அம்மா தனியாக இருப்பர்ள்''

''நோ நோ'' என்றவன் ஹேமாவின் பக்கம் திரும்பி, ''ஹேமா இவன் ஓடப் பார்க்கிருன். நீ ரூமுக்குத் தள்ளிண்டு வந்துடு'' என்று சொல்லிவிட்டு யாரையோ வழியனுப்ப வேகமாகக் கீழே இறங்கிச் சென்ருன்.

ஹேமா தோளில் தொங்கிய பையைக் கையில் எடுத்து சுற்றிக் கொண்டே இவனைப் பார்த்து, ''பயப்படாதே'' என்ருள்.

இவன் இலேசாகச் சிரித்துவிட்டு அவள் கூடவே நடந்தான்.

ஹோட்டலுக்குச் சென்றபோது எல்லாம் தயாராக இருந்தது. மேசையின் மீது சலவை செய்த வெள்ளைத் துணிபோட்டு, விஸ்கி, பீர், சின்ன கிளாஸ்—உட்கார அழகிய மரநாற்காலிகள்.

ராமதுரை நாற்காலியில் சாய்ந்தபடியே பார்த்தான். ஆஞ்சநேயலு, காமேஸ்வரன், ஒரு தாடிக்காரன்—அவன் பெயர் இவனுக்குத் தெரியவில்லை—எங்கே, என்ன போதிக்கிருனே. அப்புறம் ஹேமா.

காமேஸ்வரன் சலிப்பின்றி பேசுவதைக் கண்டு ஹேமா ராமதுரையின் கையைப் பற்றி அழுத்தினுள். பீரையும், விஸ்கியையும் கிளாஸில் நிரப்பிய தாடிக்காரன் மீது இவன் பார்வை பதிந்தது. ஒரு ஈடுபாட்டோடு அதைச் செய்து முடித்துவிட்டு எடுத்துக் கொள்ளலாம் என்பதுபோல அவன் கையைக் காட்டினுன். காமேஸ்வரன் கிளாஸை எடுத்து கையை முன்னுக்காகச் சற்று உயர்த்தி 'சியர்ஸ்' என்ருன். அதைத் தொடர்ந்து சன்னமான பல குரல்கள் எழுந்து அடங்கின. காமேஸ்வரன் ஒரு சிப் உறிஞ்சிவிட்டு பேச்சின் இழை அறுந்துவிடக் கூடாது என்கிற கவனத்தோடு பேசிக் கொண்டே இருந்தான்.

ஹேமா ராமதுரையை ''குடி'' என்று சைகை காட்டினுள். இவன் கொஞ்சம் குடித்துவிட்டு கிளாஸைக் கீழே வைத்தான்.

ஹேமா எழுந்துபோய் விஸ்கி பாட்டிலை எடுத்துக் கொண்டு வந்து இவன் எதிரே வைத்தாள். காமேஸ்வரன் அவளைப் பார்த்து ''வேண்டாம்'' என்பது போலத் தலையசைத்தான். அவளோ அதை இலட்சியம் பண்ணுமல் குறையக் குறைய ஊற்றிக் கொண்டேயிருந்தாள்.

ராமதுரை குடிப்பதை விட்டுவிட்டுப் பேசுகிற காமேஸ்வரன் வாயையே பார்த்தபடி இருந்தான். கிளாஸை எடுத்து ஒரு மிடறு குடித்துவிட்டுப் பேச்சை அவன் தொடர்ந்தான்,

தூரத்தில் இருந்த வறுவலைத் தன் பக்கமாக இழுத்து வைத்துக் கொண்டு ராமதுரை குடிக்க ஆரம்பித்தான்.

ஹேமா இவன் பக்கம் திரும்பி, ''இப்ப என்ன எழுதிக் கொண்டிருக்கே?'' என்ருள்.

''இனிமேதான் எழுதணும்''

''காமேஸ்வரனுக்கு உன்னுடைய கதை ரொம்பப் பிடிக்கிறது''

'கொஞ்சம் விஸ்கி—''

''நீ நன்ருக் குடிக்கறே''

''நீ ஏன் அப்படியே வச்சுட்டே?''

''நான் பீர்தான்''

ராமதுரை சப்தமாகச் சிரித்து தன் கிளாசை வேகமாகக் காலி பண்ணிஞன். காமேஸ்வரன் பார்வை சட்டென்று இவன் பக்கம் திரும்பியது. அதன் கோபத்தை உணர்ந்தவளாக ஹேமா சிரித்துக் கையசைத்தாள். ராமதுரை ஒன்றையும் அறியாதவஞக நாற்காலியில் நன்ருகச் சாய்ந்து கொண்டான்.

ஹேமா தன் மீது விழுந்த ராமதுரையின் கையை எடுத்து விட்டு காமேஸ்வரன் பக்கம் சென்ருள்.

ராமதுரை திடீரென்று எழுந்து நின்று வாந்தியெடுத்தான். மேசை மீது விழுந்த எச்சில் நாலாப் பக்கமும் நாற்றத்தோடு சிதறியது. ஹேமா பயந்த வேகத்தில் அவள் கைபட்டு பீர்பாட்டில் தரையில் விழுந்து உடைந்தது. காமேஸ்வரன் அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

ஆஞ்சநேயலு முகத்தைச் சுளித்து, ''காமேஸ், இந்த மாதிரி ஆட்களோடு எல்லாம் எதுக்குப் பழக்கம் வெச்சுக்கறே?'' என்ருன்.

''யாரு பழக்கம் வெச்சுக்கரு. அதுவேதான் வந்து விடாம, கூடவே சுத்திகிட்டிருக்கே''

ராமதுரை இன்ஞெருமுறை அடிவயிற்றிலிருந்து ஓக்காளித்து சப்தத்தோடு வாந்தியெடுத்தபடி கீழே சாய்ந்தான். ●

# சிவ தாண்டவம்: ஓர் அஞ்சலி

(Dance of Siva; A Tribute to Ananda Coomaraswamy)

[இந்தியக் கலைகளின் நோக்கங்களை இந்தியருக்கும் சேர்த்து இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் உலகத்துக்குப் புலப்படுத்தியவர் ஆனந்த குமாரஸ்வாமி. அவரைப் பற்றிய வண்ணச் செய்திப் படத்தை அமெரிக்கத் தகவல் நிலையம் அண்மையில் திரையிட்டது—ஆசிரியர்]

ஆனந்தா கெண்டிஷ் குமாரசாமியின் நூற்றாண்டு நினைவை ஒட்டி சிதானந்த தாஸ்குப்தா தயாரித்த படம் இது.

புவியியல் வல்லுனராக, கனிவளத்தைத்தேடி இலங்கையில் காடு மலைகள் எனச் சுற்றிய குமாரசாமி, அங்கு கேட்பாரற்றுக் கிடக்கும் சிற்ப—கட்டிடக் கலைச் செல்வங்களுக்கு அறிமுகமாகிறார். ஈழத்துக் கலை அவரை இந்தியக் கலைக்கும், அதிலிருந்து தூரக்கிழக்கு நாடுகளின் சிற்பச் செல்வங்களுக்கும் இட்டுச் செல்கிறது. இந்நாடுகளின் கலை வரலாற்றின் அடித்தளத்தில் இழைந்தோடும் பொதுத்தன்மை அவரை ஈர்க்கிறது. ஒரு கலாச்சாரத்தின், ஒரு தத்துவத்தின் வெளிப்பாடே கலைப் பொருட்கள் என்று உணர்ந்த குமாரசாமி கலைப்பொருள்களைக் கூர்ந்து நோக்குவதன் மூலம் அவற்றின் தத்துவ அடிப்படையை எட்ட முயல்கிறார். அவரது வாழ்வு முழுவதும் இம் முயற்சியே. சரமாரியாக வெளிவரும் அவருடைய நூல்கள் ஒரு புதிய உலகத்தையே திறக்கின்றன. அவ்வாறு அவர் நடராஜர் கருத்தமைப்பு (concept) பற்றி தத்துவார்த்தமாக எழுதிய ஒரு கட்டுரையின் தலைப்பே இப்படத்தின் தலைப்பாக அமைகிறது.

சிதானந்த தாஸ்குப்தா. கல்கத்தா பிலிம் சொஸைட்டியின் பாரம்பர்யத்தில் வந்தவர். திரைப்படக்கலை பற்றிய கோட்பாடுகளை நன்கு கற்றுணர்ந்த பிறகே 'மெகபோனில்' கைவைக்கும் கலைஞர்களில் ஒருவர். எல்லா நுண்கலைகளையும் தன்னுள் அடக்கும் 'திரைப்பட மொழியை' நன்கு கற்றவர். அம் மொழியில் அவர் இயற்றிய கவிதையே இப்படம்.

தாஸ்குப்தா ஒரு சினிமா டைரக்டருக்குக் கிடைத்திருக்கும் பலவித சாதனங்களையும், உத்திகளையும் [காட்சிப் படிமங்கள், சப்தம் (சங்கீதம், சுற்றுப்புற ஒலிகள், உரையாடல்கள், வர்ணனைகள்) துணைத்தலைப்புகள், அசலனப் படங்கள்] அவற்றின் தன்மையறிந்து, நேரமறிந்து அளவோடு பயன்படுத்துகிறார்.

சொல்லவந்ததைக் கச்சிதமாக, அழுத்தமாகச்சொல்கிறார். சில இடங்களில் காட்சிப் படிமங்களும், வர்ணனையும் இணைந்து சினிமா

வின் அசுரசக்தியைக் கணப்பொழுதில் வெளிப்படுத்துகின்றன. 'இந்தியக் கலை தொய்ந்திருந்தது' என்று கூறும்போது, பூ வரிமானம் நிறைந்த ஒரு கல்தூண், புல்பூண்டுகள் மறைக்கத் தரையில் கிடப்பது காட்டப்படுகிறது. கவனிப்பாரற்றுக் கிடந்த கல் தூண் குமாரசாமியின் கவனத்தை ஈர்ப்பது போல் காற்றில் அச்செடிகள் அசைகின்றன.

திரைப்பட மொழிக்கு, அறிவைத் தாண்டி, உணர்வைத் தொடும் ஒரு தன்மை உண்டு, சங்கீதம் போல. சில காட்சிகள் படத்திற்குச் சம்பந்தமற்றவை போல மேலோட்டமாகத் தோன்றினாலும், ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் டைரக்டர் சொல்ல வருவதை ஆத்மார்த்த ரீதியாக உணரவைத்து விடக்கூடியது இம்மொழி. உதாரணம் இலங்கையரின் மேனாட்டு மோகத்தைக் குமாரசாமி கடுமையாகக் கண்டித்தார் என்பதைக் காட்ட வரும்போது, பரந்த ஒரு நீர்ப்பரப்பின் மேல் ஒரு மேகக் கூட்டம் போல் மெல்லப் பறந்து அமர்கிறது ஒரு நீர் வாத்துக்கூட்டம். காட்சிப் படிமங்களைத் துணைத்தலைப்புகளாகவும் உபயோகிக்கிறார் தாஸ் குப்தா. ஜாவாவிலுள்ள ப்ரம்பானன் (Prambanan) சிற்பக்கலையைக் காண்பிக்குமுன், ஒரு தூரக்கிழக்கு பெண்ணின் முகம் திரையில் பளிச்சிட்டு மறைகிறது.

காமராவின் பல அசைவுகளும் சினிமாவுக்கு பலமளிக்கும் வகையில் கையாளப்படுகின்றன. சிறுவன் குமாரசாமி இலங்கையில் என்று கூறுகையில் வெற்றுடம்புடன் வயலில் வேலை செய்யும் குடியானவர்கள் மேல் காமரா சில விநாடிகள் தங்குகிறது. பிறகு பின்னோக்கி zoom. வயல்வெளி பரந்து விரிகிறது. இருமருங்கிலும் தென்னை மரங்கள். குடியானவர்கள் கறுப்புப் புள்ளியாகி மறைகிறார்கள். zoom தொடர்கிறது. மலை சூழ்ந்த ஒரு பள்ளத்தாக்கின் நடுவே ஒரு வயற்பரப்பு. காட்சி மாறுகிறது.

காட்சி மாறும்போது 'மயங்கித் தெளிதல்' (fade-in, fade-out) முறையையும் 'கரைதலை'யும் (dissolve) அழுத்தமாகக் கையாளுகிறார். ஈழத்துக் கலைச்செல்வங்கள் மூலம் குமாரசாமி இந்தியக் கலைப் பாரம்பரியத்திற்கு வருகிறார் என்று கூறவரும் போது சிக்ரியா சுவரோவியப் பெண்ணின் உருவம் 'மயங்கித் தெளிந்து', அஜந்தாவின் கறுப்பு ராஜகுமாரி வெளிப்படுகிறாள். குமாரசாமியின் மிஸ்டிக் இயல்பைக் காட்ட, அவருடைய கறுப்பு—வெள்ளை புகைப்படம் ஒன்று காட்டப்படுகிறது. பின் காமரா மெதுவாக ஊர்ந்து அப்படத்திலிருக்கும் ஒரு பழுப்புப் புள்ளியை ராட்சத க்ளோஸ்—அப்பில் காட்டுகிறது இப்புள்ளி ஒரு சூட்சும வடிவமாக மாறித் திரையில் சில விநாடிகள் தங்கி மறைகிறது. குமாரசாமியின் மறைவு பற்றிச் சொல்லும் போது அடுத்தடுத்து 'கரைதல்' மூலம் சில கடலலைக் காட்சிகள் காட்டப்படுகின்றன. கடைசிக் கடலலைக் காட்சியில் காமரா மேல் நோக்கிப் போய் மேக மற்ற நீல வானத்தில் நிலைக்கிறது.

இந்தியா, இலங்கை, தூரக்கிழக்கு நாடுகளின் சிற்பக் கலையின் பொதுத்தன்மையை சினிமாமூலம் விளக்குகிறார் தாஸ் குப்தா. வங்காளப் பாலா (Pala) சிற்பத்தையும், பல்லவர் கோயிலையும், பொலனறுவா புடைப்புச் சிற்பத்தையும், போராபுதூரையும் ஒரே மூச்சில் கண்டு கிரகிக்க முடிகிறது. அர்த்தம் பொதிந்த காமரா கோணம், நறுக்குத் தெறித்தாற் போன்ற எடிட்டிங், இக்கிரகிப்பை எளிதாக்கு

கின்றன. மொகலாயச் சிற்ருேவியங்கள் பெரிதாக்கப் பட்டால் (blow-up) அவை உருவப்படம் (portrait) அல்லது நிலக்காட்சி (landscape) ஆகவும், ராஜஸ்தானியச் சிற்ருேவியங்கள் சுவரோவியங்களாகவும் (murals) காணப்படும் என்று அவ்விரு ஓவியங்களின் தனித்தன்மைகளை விளக்கிய குமாரசாமியின் கூற்றை சில நொடிகளில் திரைப்பட மொழியில் கூறிவிடுகிருர் தாஸ் குப்தா.

சினிமா ஒரு முழுமையான அனுபவம். ஒரு படத்தில் இசை அல்லது எடிட்டிங் மட்டுமே நன்ருக இருந்தது என்று கூறுவது பொருத்தமற்றதாகப் படுகிறது. ஆனல் அவை இச்சினிமா ஏற்படுத்தும் கருவிகள் என்பதில் சந்தேகம் இல்லை. உதாரணம், ராக-ராகினி சிற்ருேவியங்களைக் காட்டும் காட்சி. இச் சிற்ருேவியங்கள் பருவ காலங்களைப் பிரதிபலிக்கும் தன்மை உடையவை. பளிச், பளிச்சென்று தொடர்ந்து பல சிற்ருேவியங்கள் காட்டப்படுகின்றன. பருவ கால வரிசையில் கடைசியாக ஒரு சிற்ருேவியம் மழைகொட்டும் காட்சி. இதன் இசை (ரவிசங்கர்) இக்கால மாற்றங்களுக்கேற்ப ஒலித்து அந்த சினிமா அனுபவத்தை ஆழமுள்ளதொன்ருக்குகிறது.

ஆனந்தா குமாரசாமி ஒரு விஞ்ஞானி; வேதாந்தி; கலைவரலாற்ருசிரியர். இந்தியக் கலைக்குப் புத்துயிரூட்டியவர். இவரது வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதுடன் ஓவிய, சிற்பத்துறைக்கும், இந்தியக்கலைக்கும் அவர் ஆற்றிய பணிக்கும், அவர் நோக்கங்களுக்கும் ஒரு சீரிய அறிமுகமாக அமைகிறது இக்கவிதாஞ்சலி.

—தேவபிச்சை

---

# பாதை

இந்நகரத்தில் ஓடிடும் கோடுகளைப் பிடித்து,
வளைந்து நெளிந்து செல்லும் நிழல்களைப் பார்த்து,
ஓடுகின்றேன் தெளிவற்ற பாதைகளின் பின்னே,
மாயம் காட்டும், கரடுமுரடான, நெளிந்து, வளைந்த,
வெம்மை நிறைந்த பாதைகளின்
    வழிப் போக்கன் நான்
இக்கணங்களில்
    இப் பாதைகளில்
        நான் வழிப் போக்கன்
            அவ்வளவுதான்.
சைக்கிளாக, ரிக்ஷாவாக, ஓடுகிறேன்
பெருமூச்சு வாங்க, புகை ஊதியவாறு,
அறிந்து, தெரிந்த திருப்பங்களிலே நின்று,
பொய்யானதொரு ஆறுதலை,
தளர்ந்த உடலுக்கு அளிக்க,
காப்பி ஹவுஸ்க்குள்ளே செல்லுவேன்
பகட்டான காலண்டரை வெறித்து,
நசையைத் தணித்துக் கொண்டு,
பரபரப்பான செய்திகளைப் படிப்பேன்,
போலி மகிழ்ச்சியின் புத்துணர்வு பெற்று
ஓடுவேன் மீண்டும் அடுத்த திருப்பம் நோக்கி.

பஞ்சாபி : மோகன் ஜீத்

தமிழ் : சரஸ்வதி ராம்நாத்

# அக்கம் பக்கம்

**சா**கித்ய அகாதமி சென்ற மாதம் இரண்டு கூட்டங்களை ஏற்பாடு செய்திருந்தது.

முதல் கூட்டம்: 'தமிழ் இலக்கியத்திற்கு மு. வரதராசன்—அ. சீனிவாசராகவன் ஆகியவர்களின் பங்கு.'

கூட்டத்தில் பேசியவர்கள் சொன்னவை—

அகிலன் :

''மு. வ. துணைவேந்தர் ஆனதும் நிறைய ஃபோன் கால்கள் வந்தது. அதில் சலிப்புற்ற அவர் தம் குடும்பத்தாரிடம் சொன்னார்—யாரிடமிருந்து ஃபோன் வந்தாலும் என்னிடம் தராதீர்கள், அகிலனைத் தவிர.''

சென்னை பல்கலைக் கழகத்து தமிழ்ப் பேராசிரியர் திரு சி பால சுப்பிரமணியம் :

'ஒரு மாணவர் எப்போதும் தாமதமாகக் கல்லூரிக்கு வந்து கொண்டிருந்தார். டாக்டர் மு. வ அந்த மாணவரை அழைத்துக் காரணம் கேட்டார். வேலை பார்த்துவிட்டு நடந்து வருவதால் தாமத மாகி விடுகிறது என்றார் மாணவர். மாலையில் தன்னை வந்து பார்க்கும் படி மு வ. சொன்னார். நானும் அந்த மாணவரும் மாலையில் மு. வ. வைப் பார்த்தோம். நூறு ரூபாய்க்கு செக் கொடுத்து சைக்கிள் வாங்கிக் கொள்ளச் சொன்னார் அந்த மாணவர் இப்போது அண்ணா மலைபுரத்தில் லட்ச ரூபாய்க்கு வீடு கட்டிக் கொண்டு சுகமாக இருக்கிறார்.

நீதிபதி மகராஜன் :

''புகையிலைப் பெட்டியை அ. சீனிவாசராகவன் மறந்து வந்துவிட்டால் மாடி ஏறிப் போய் கொண்டுவந்து கொடுக்கும் சிஷ்யர்

மகராஜன் மேடை ஏறினல் மட்டும் ஆசிரியர் சொல்வதையெல்லாம் அடியோடு மறுக்கிருரே என்று என்னை குறை சொன்னுர் நண்பர் ஒருவர்.''

மு. வரதராசன், அ. சீனிவாசராகவன் ஆகியோரின் இலக்கியப் பங்கு மேலே கண்டதுபோலதான் என்று அவர்களின் சிஷ்யர்களும் கருதுகிருர்கள் போலும்.

இதே கூட்டத்தில் திரு. டாட்சுவோ மோரி மோட்டா (Prof. Tatsuo Morimoto) எனும் ஜப்பான் மீஜி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் அறிமுகப்படுத்தப்பட்டார்.

திரு மோரி மோட்டா, ''தமிழ் மொழிக்கென்று உள்ள காரக்டர் என்ன?'' என்று கேட்டதும் திரு. எஸ். மகராஜன், ''தமிழகத்தில் உள்ள கோயில்களையெல்லாம் சுற்றிப் பாருங்கள். தமிழ் மொழியின் குணம் நன்ருகப் புலப்படும்'' என்ருர்.

இரண்டாவது கூட்டம் இரு பிரஞ்சு எழுத்தாளர் சந்திப்பு திரு ரோஜர் கைலோயி (Roger Caillois), திரு. கிளாட் சைமன் (Claude Simon) இவர்கள் பிரஞ்சு மொழி மட்டுமே அறிந்தவர்கள். கேள்விகள் ஆங்கிலத்திலும், தமிழிலும் கேட்கப்பட்டன. பதில்கள் பிரஞ்சு மொழியில். அவைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து சூழ்நிலை கெடாதவாறு சொன்னுர் ஸ்ரீராம்.

கூட்டத்தில் அவர்கள் சொன்னவைகளைத் தொகுத்துப் பார்ப்ப தால் பிரஞ்சு எழுத்தின் தற்போதைய நிலைமையை ஓரளவு அறிய முடியும்

பிரான்சில் நியூவேவ் எழுத்திற்கு இளைஞர்களைவிட்டால் பிரமாத மான ஆதரவு ஒன்றும் இல்லை. ஆனலும் அந்தவகை எழுத்தாளர்கள் தொடர்ந்து எழுதி வருகிருர்கள். பிரஞ்சு இளைஞர்களைவிட—ஜப்பான் ஸ்காண்டிநேவியா இளைஞர்கள் முற்போக்கான மனப்பான்மை கொண்டு இருக்கிருர்கள் என்று இரண்டு எழுத்தாளர்களும் கருது கிருர்கள்.

எதற்காக எழுதுகிருேம் என்று அவர்கள் தங்களை கேட்டுக் கொள்வது இல்லை. எது இலக்கியம் என்று சார்த்தர் போலவும் அவர்கள் கேட்பது இல்லை. இலக்கியத்தின் மூலம் எந்தச் செய்தியை யும் போதிக்கும் நோக்கம் கிடையாது. அவர்கள் எழுதுகிருர்கள். எந்தவிதமான வரையறையும், நோக்கமும் இல்லாமல் எழுதுகிருர்கள். அதில் ஒரு வடிவமும், திட்டமும் அதன் போக்கிலேயே இயல்பாக அமைகிறது.

பிரஞ்சு இலக்கியத்திற்கு உள்ள மரபு — பாரம்பரியம் பற்றி விசேஷ அக்கறை காட்டாது அவர்கள் எழுத்து இருக்கவேண்டு மென விரும்புகிருர்களாம்.

எழுத்தாளன் என்ற முறையில் மேடை நாடகங்களில் எவ்வித அக்கறையும் இல்லையென்றாலும் நாடகங்கள் நடப்பதைக் காட்டிலும் படிப்பதையே அவர்கள் விரும்புகிறார்கள்.

ஒரு எழுத்தாளனின் எழுத்து சினிமா, டெலிவிஷன் மூலமாக பிரமாதப் படுத்தப்பட்டு, நிறைய பணத்தைக் கொண்டு வந்தாலும் அதற்கு உண்மையான இலக்கிய அந்தஸ்து இல்லாது போனால் ஒருவித பிரயோசனமும் இல்லை என்று இரண்டு எழுத்தாளர்களும் தெளிவாகக் கூறினார்கள்.

மரபு—ஜதீகம் ஆகியவற்றை இலக்கியத்தில் காக்க இலக்கியக் குழுக்கள் பிரான்சில் உள்ளன. அதை மீறவும், முரண்படவும் வேறு குழுக்கள் இருக்கின்றன. இரண்டும் தொடர்ந்து பக்கத்தில் பக்கத்தில் செயல்பட்டு வருகின்றன.

புதிதாக எழுதத் தொடங்கியுள்ள எழுத்தாளர்களின் சிறப் பான படைப்புக்களை வெளியிடவும், முதிய எழுத்தாளர்களின் சிறப் பான எழுத்துக்களை வெளியிடவும் எழுத்தாளர்களின் குழுக்கள் செயல்படுகின்றன. இரண்டு பேராலும் புத்தகம் வெளியிடும் நிறுவ னங்களுக்கு அதிக விற்பனையும், லாபமும் கிடையாது; எனவே அவர்கள் எழுத்துக்களை வெளியிட அவை முன்வருவதில்லை.

சோதனை எழுத்துக்களின் புத்தகங்கள் வெளியாகின்றன. ஆனால் சுமார் 600 பிரதிகளுக்குமேல் விற்பனையாவது இல்லை.

பிரஞ்சு அகாதமி ஒரு சுயேச்சை நிறுவனம். அதில் அரசாங் கத்தின் குறுக்கீடு நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ இல்லை. அரசாங்கம் அகாதமியை ஏற்க முன் வந்தபோது எழுத்தாளர்கள் அதை விரும்பவில்லை. அதற்குப் பண உதவி செய்ய வந்தபோது அதை நிராகரித்திருக்கிறார்கள். அகாதமி சுயேச்சையாக இயங்கு வதில் அவர்கள் கவனமாக இருக்கிறார்கள்.

—நா. கிருஷ்ணமூர்த்தி

